# பகவத் பாதை

**BAGAVATH PATHAI**

• Volume : 1 • Issue : 17 — தமிழ் மாத இதழ் — • July 2015 • Annual Subscription Rs. 100/-

• மலர்:1 • இதழ்:17 • ஜுலை 2015 • வருடச் சந்தா ரூ.100/-

## சராசரி மனிதரின் கோபமும் ஞானியின் கோபமும் ஒன்றா?



உணர்ச்சிகள் அனைத்தையும் பிரவாகமாக ஏற்றுக் கொள்பவர்கள் வித்தியாசமானதொரு பரிமாணத்தில் வாழத் துவங்குகிறார்கள். அந்த நிலையில் அவர்கள், தங்களுக்கு ஏற்படும் அக உணர்ச்சிகள் அனைத்தையும் புறச் செயல்களுக்கு எவ்வாறு பயன்படுத்திக் கொள்வது என்ற கலையையும் கற்றுக் கொள்கிறார்கள்.

– ஸ்ரீ பகவத்



“நமது மனதில் தோன்றும் மோசமான உணர்ச்சிகளைச் சீரமைக்காது விட்டுவிட வேண்டும்; அதனை அப்புறப்படுத்த போராடக் கூடாது”

- என்று நாம் கூறி வருகிறோம்.

நமது கருத்தைக் கேள்விப்பட்ட சிலர் இது சம்பந்தமான ஒரு கேள்வியை முன் வைக்கின்றனர்.

“நமது மனதில் எத்தனையோ விதமான உணர்ச்சிகள் தோன்றுகின்றன. அடுத்தவர் மீது பொறாமை ஏற்படுகிறது. கோபம் ஏற்படுகிறது. முறையற்ற காமம் ஏற்படுகிறது. இவையெல்லாம் தவறான உணர்ச்சிகள் என்று நம் அனைவருக்குமே தெரியும். இவை அனைத்தும் சரியான உணர்ச்சிகள் தாம் என்று எந்த மகான்களும் கூறியதில்லை; எந்த சாஸ்திரங்களும் கூறியதில்லை.....”

“ஆன்மிகத்தில் ஈடுபடும் ஆன்ம சாதகர்கள் அனைவருமே இத்தகைய மோசமான உணர்ச்சிகளிலிருந்து விடுபடுவதையே ஆன்மிக சாதனையாகக் கருதுகிறார்கள். ஆன்மிகத்தில் ஈடுபாடு காட்டாத சராசரி மனிதர்களுக்கு இந்த உணர்ச்சி வந்தால் அவர்கள் எப்படி நடந்து கொள்வார்கள்? அத்தகைய உணர்ச்சிகள் எவையும் தங்களுக்கு ஏற்படக்கூடாது என அவர்கள் எந்த முயற்சியையும் செய்ய மாட்டார்கள்.....”

“அப்படியானால், நமது கூற்றுப்படி நமது உணர்ச்சிகளை எதிர்த்துப் போராடாதவர்களும், மேலே குறிப்பிட்ட சராசரி மனிதர்களும் ஒரே அணுகுமுறையைப் பின்பற்றுகிறார்களா? நமது கருத்துகளை ஏற்றுக் கொண்ட நமக்கும், சராசரி மனிதர்களுக்கும் என்ன தான் வித்தியாசம்?”

ஒரு சராசரி மனிதனின் செயல்பாட்டை மட்டும் முதலில் ஆய்வுக்கு எடுத்துக் கொள்வோம்.

நாம் ஒரு ஹோட்டலில் உணவுக்கு ஆர்டர் கொடுக்கிறோம். உணவு பரிமாற கால தாமதம் ஏற்படுகிறது. இதனால் நமக்குக் கோபம் ஏற்பட்டு விடுகிறது. ஒரு சராசரி மனிதன் இந்தக் கோபத்திலிருந்து விடுபட வேண்டும் என்றோ, இத்தகைய கோபம் ஏற்படக் கூடாது என்றோ எண்ணுவது கிடையாது.

இதே நிலையில் ஓர் ஆன்ம சாதகன் இருக்கும் பட்சத்தில் அவர் தனக்கு இத்தகைய கோபம் ஏற்படக்கூடாது; பொறுமை தான் ஏற்பட வேண்டும் என எண்ணுவார். எப்போதும் அமைதியாகவே இருக்க வேண்டும் என்ற தனக்கு கோபம் ஏற்பட்டு விட்டதே என்று வருத்தப்படுவார்.

ஆனால் சராசரி மனிதருக்கு இத்தகைய வருத்தம் ஏற்படாது. தனக்கு ஏற்பட்ட கோபம் நியாயமானது என்றும், இயற்கையானது என்றுமே கருதுவார்.

ஆன்மிக சாதகர்கள் இப்படி தமக்கு ஏற்பட்ட கோபம் சரியானதல்ல என்று தமது உணர்ச்சிகளுடன் முரண்படுகிறார்கள்.

சராசரி மனிதர் இப்படி முரண்படுவதில்லை. தனக்கு ஏற்பட்ட கோபம் இயற்கையானது என்றும், நியாயமானது என்றும் கருதுகிறார்.

இங்கு நமது அணுகுமுறை என்ன? இங்கு சராசரி மனிதனின் அணுகுமுறை தான் நமது அணுகுமுறையாகவும் உள்ளது. நமக்கு ஏற்படும்

உணர்ச்சிகள் அனைத்தும் இயற்கையானது என ஏற்றுக் கொள்வதே நமது அணுகுமுறை.

இங்கே நமது அணுகுமுறையும் சராசரி மனிதனின் அணுகுமுறையும் தான் ஒன்றோடு ஒன்று பொருந்திப் போகிறது. ஆன்மிக சாதகர்களின் அணுகுமுறை தான் வேறுபட்டுப் போகிறது.

இது போல் இன்னுமொரு சம்பவம். ஒருவருக்கு ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் முறையற்ற காம உணர்ச்சி ஏற்படுவதாக வைத்துக் கொள்வோம்.

ஆன்ம சாதகரை எடுத்துக் கொண்டால் அவர் ''இப்படியொரு உணர்ச்சி- சிந்தனை நமக்கு ஏற்படலாமா?'' என்று அந்த உணர்ச்சியோடு போராட ஆரம்பித்து விடுவார்.

இந்தச் சூழ்நிலையில் ஒரு சராசரி மனிதரின் செயல்பாடு எவ்வாறு இருக்கும்? தனக்கு வந்த உணர்ச்சிகளை அவர் இயற்கையானதாக எடுத்துக் கொள்வார். அந்த உணர்ச்சி அவருக்கு ஒருவித மகிழ்ச்சியைக் கூட கொடுக்கலாம். அவர் தன்னை ஒரு குற்றவாளியாகக் கருத மாட்டார்.

நமது அணுகுமுறையில் உள்ளவர்கள் இதே சூழ்நிலையைச் சந்திக்க நேர்ந்தால் அவர்கள் இதனை எவ்வாறு எதிர்கொள்வார்கள்?

ஒரு சராசரி மனிதரைப் போலவே, தமக்கு வந்த இந்த உணர்ச்சியையும், சிந்தனையையும் இயற்கையானதாக எடுத்துக் கொள்வார்கள். தம்மைக் குற்றவாளியாகக் கருத மாட்டார்கள். இந்த உணர்ச்சி தமக்கு ஏற்பட்டிருக்கக் கூடாது என்று போராட மாட்டார்கள்.

இங்கு ஆன்மிக சாதகர்கள் தாம் செயற்கையாக எடுத்துக் கொண்டு போராடுகிறார்கள்.

மேலே கூறப்பட்ட இரண்டு சம்பவங்களிலும் சராசரி மனிதரின் செயலைப் போன்றே நமது அணுகுமுறையில் உள்ளவர்களது செயல்களும் அமைந்திருக்கின்றன.

அப்படியானால் இருவருக்கும் என்ன தான் வேறுபாடு?

நமது அணுகுமுறையில் உள்ளவர்களுக்கும் சராசரி மனிதர்களுக்கும் என்ன தான் வேறுபாடு?

நமக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளில் ஒரு வகையான உணர்ச்சிகளை மட்டுமே இது வரை பார்த்துள்ளோம்.

நமக்கு ஏற்படும் உணர்ச்சிகளில் இன்னும் ஒரு வகை உள்ளது. அதனையும் பார்ப்போம்.

இந்தச் சராசரி மனிதரையே உதாரணமாக எடுத்துக் கொள்வோம்.

இப்போது அவருக்கு புதிய ஒரு பிரச்சினை. அவருடைய உடல்நலம் பாதிக்கப்படுகிறது. இதனால் அவருக்கு மனவருத்தம் ஏற்படுகிறது. அவருக்கு குணமாக்க முடியாத நோய் ஏற்பட்டிருக்குமோ என மருத்துவர் சந்தேகிக்கிறார்.

பலவிதமான மருத்துவப் பரிசோதனைகளும் எழுதிக் கொடுக்கிறார்.

இவரும் ஒவ்வொரு பரிசோதனையாக மேற்கொள்கிறார். அந்த நோய் இருக்குமோ, இந்த நோய் இருக்குமோ என அவருடைய மனம் பயத்தினால் பதைபதைக்கிறது. மருத்துவப் பரிசோதனையில் அவருக்கு ஏற்பட்டுள்ளது குணமாக்க முடியாத நோய் தான் என்று உறுதி செய்யப்படுகிறது.

இப்படி ஏற்பட்டு விட்டதே என அவருடைய மனம் வேதனைப்படுகிறது. எந்த நேரத்திலும் மரணம் ஏற்பட்டு விடுமோ என பயப்படுகிறார்.

அவருக்கு ஏற்படும் மன உணர்ச்சிகள் இப்போது துயரமாகவும், பயமாகவும் வெளிப்படுகின்றன.

இவற்றை அவர் எப்படி ஏற்றுக் கொள்வார்?

தனக்கு ஏற்பட்ட துயரமான-பயமான உணர்ச்சிகளை இயற்கையானது தான் என ஏற்றுக் கொள்வாரா?

கோபத்தை எப்படி இயற்கையானது என்று ஏற்றுக் கொண்டார்களோ, அப்படியே இந்த உணர்வுகளையும் இயற்கையானது என ஏற்றுக் கொள்வார்களா?

அப்படி அவர்களால் ஏற்றுக் கொள்ள முடியாது.

''பயப்படாதீர்கள். நீங்கள் பயப்பட்டால் நோய் இன்னும் தீவிரமாகி விடும்'', என்று மருத்துவர்கள் அவர்களிடம் கூறுவார்கள்.

ஆனால் அவர்களுடைய பயம் மேலும் அதிகமாகுமே தவிர குறையாது.

அவர்களுடைய துயரத்திலிருந்தும், பயத்திலிருந்தும் விடுபடவே விரும்புவார்கள். அது ஒரு அகப் போராட்டமாகவே இருக்கும்.

சராசரி மனிதர்களுக்கு தங்களுடைய மனத்துயரங்களிலிருந்து விடுபடுவதற்கு என்ன செய்வது என்றே தெரியாது. ஆகவே, அவர்கள் மதுவை அருந்துவது, தற்கொலை செய்து கொள்வது என்ற முடிவுக்கு வந்து விடுவார்கள்.

ஆன்மிக சாதகர்களைப் பொறுத்த அளவில் அவர்கள் இப்படிக் கீழான நடவடிக்கைகளில் இறங்க மாட்டார்கள். தங்களுக்கு ஏற்பட்ட துயரங்களை தங்களுடைய வளர்ச்சிக்கு உதவியாகக் கூட பயன்படுத்திக் கொள்வார்கள்.

இங்கு நமது அணுகுமுறையில் உள்ளவர்கள் மட்டும் தங்களுடைய கோப-காம உணர்ச்சியை எப்படி இயற்கையானது என்று ஏற்றுக் கொண்டார்களோ அப்படி இந்த மனத்துயரத்தையும், பயத்தையுமே கூட இயற்கையானது என ஏற்றுக் கொள்வார்கள்.

அவற்றை நாம் சுதந்திரமாக இயற்கையாக ஏற்றுக் கொள்ளும் போது அவை பிரவாகமாக ஓடி மறைந்து விடுகின்றன.

இது போன்று – இது தொடர்பான இன்னுமொரு கேள்வியும் நமக்கு ஏற்படுகிறது.

"ஒரு சராசரி மனிதனுக்கு இப்படி தேவையற்ற உணர்ச்சிகள் ஏற்படுவதில் ஆச்சரியமில்லை. ஆனால் தெளிவு பெற்ற ஒருவருக்கும், பயம், கோபம் போன்ற எதிர்மறையான–தேவையற்ற உணர்ச்சிகள் ஏற்படுமா?"

இந்த கேள்விக்கு நாம் பதில் பெறுவதற்கு முன்னால் நாம் ஒரு உதாரணத்தைப் பார்ப்போம்.

நாம் ஒரு மோட்டார் வாகனத்தை வைத்திருக்கிறோம் – ஒரு பைக் வைத்துள்ளோம். அதற்கு மொத்தம் நான்கு கியர் உள்ளதாக வைத்துக் கொள்வோம்.

வண்டியை ஸ்டார்ட் செய்கிறோம். பிறகு முதலாவது கியரை உபயோகித்து வண்டியை நகர்ந்து ஓடச் செய்கிறோம். வண்டி நல்ல வேகத்துடன் ஓட ஆரம்பித்ததும் ஒவ்வொரு கியராக மாற்றி டாப் கியரான நான்காவது கியருக்கு வருகிறோம்.

இப்போது ஒரு கேள்வி. வண்டியை ஸ்டார்ட் செய்த உடனேயே கடைசி கியரான நான்காவது கியரை ஏன் பயன்படுத்தக் கூடாது? அப்படி பயன்படுத்தினால் என்ன ஆகும்?

வண்டியை இழுக்க முடியாமல் இழுத்து இடித்துக் கொண்டு எஞ்சின் நின்று விடும்.

ஏன்?

நிற்கும் வண்டிக்கு எடை அதிகம்; ஓடக்கூடிய வண்டி எடையை இழந்து விடும். எடை இழந்த நிலையில் நாம் நான்காவது கியரை உபயோகித்துக் கொள்ளலாம்.

இது போன்று இன்னுமொரு உதாரணம்.

ஒரு மேஜை உள்ளது. அதனுடைய எடை 100 கிலோ. அந்த மேஜையை நாம் நகர்த்தித் தள்ள வேண்டுமானால் 100 கிலோவுக்கும் அதிகமான பலத்தை நாம் நமது கைகளின் மூலம் பயன்படுத்தி தான் நகர்த்த முடியும்.

அப்படி அதனை கஷ்டப்பட்டு தள்ளி நகர்த்தினால் கூட அது தரையில் கீரல்களை ஏற்படுத்தி விடும்.

அதே நேரம் அந்த மேஜையின் கால்களுக்கு சக்கரங்கள் பொருத்தப்பட்டிருப்பதாக வைத்துக் கொள்வோம். இப்போது நீங்கள் 100 கிலோ எடைக்கான பலத்தை உபயோகிக்காமல் வெறும் விரல்களால் கூட அந்த மேஜையை நகர்த்தி விட முடியும்.

அப்படி உருண்டோடும் நிலையில், அந்த மேஜையானது தரையில் எந்தக் கீரலையும் ஏற்படுத்தாது.

மோட்டார் வாகனம் என்பது அது நின்று கொண்டிருந்தாலும் மோட்டார் வாகனந்தான்; ஓடிக் கொண்டிருந்தாலும் மோட்டார் வாகனந்தான்.

இரண்டுக்கும் என்ன வித்தியாசம் என்றால் நின்று கொண்டிருக்கும் வாகனம் எடையோடிருக்கும்;

நகர்ந்து கொண்டிருக்கும் வாகனத்துக்கு எடை இருக்காது.

இப்படி தான் நமது உணர்ச்சிகளும் அமைந்துள்ளன. அவை அனைத்தும் சுதந்திரம் பெற்று நகர்ந்து கொண்டிருக்கும் நிலையில் அவை அனைத்தும் எடை இல்லாமல் போய் விடுகின்றன; அழுத்தம் இல்லாமல் போய் விடுகின்றன.

மனப்பதிவுகள் ஏற்படுத்தாமல் போய் விடுகின்றன.

உணர்ச்சியைப் பொறுத்த வரையில் நகர்ந்து செல்லாதிருக்கும் துயரமும் ஒன்று தான், பிரவாகமாகச் செல்லும் துயரமும் ஒன்று தான்.

ஆனால் நகராத உணர்ச்சிக்கு அழுத்தம் உண்டு;

நகரும் உணர்ச்சிக்கு அழுத்தம் கிடையாது.

மேம்போக்காகப் பார்த்தால் இரண்டு உணர்ச்சிகளும் ஒன்றே. ஆனால் அடிப்படையில் இரண்டும் வேறு வேறு.

மனம் விடுதலையுற்ற நிலை என்பது இதுதான்.

சராசரி மனிதர்கள் சில உணர்ச்சிகளை மட்டுமே அங்கீகரிக்கிறார்கள். மற்றவற்றோடு போராடுகிறார்கள். இதனால் மனவிடுதலை என்பதை அறியாதிருக்கிறார்கள்.

ஆனால் உணர்ச்சிகள் அனைத்தையும் பிரவாகமாக ஏற்றுக் கொள்பவர்கள் வித்தியாசமானதொரு பரிமாணத்தில் வாழத் துவங்குகிறார்கள்.

அந்த நிலையில் அவர்கள், தங்களுக்கு ஏற்படும் அக உணர்ச்சிகள் அனைத்தையும் புறச் செயல்களுக்கு எவ்வாறு பயன்படுத்திக் கொள்வது என்ற கலையையும் கற்றுக் கொள்கிறார்கள்.

எல்லா உணர்ச்சிகளுக்கும் ஏதாவது ஒரு பயன்பாடு உள்ளது. அதை நல்ல முறையில் – பாசிட்டிவாக பயன்படுத்திக் கொள்கிறார்கள்.



## ?கேள்வி பதில்¿

**கேள்வி :** நான் கடந்த 20 வருடங்களாக பல்வேறு ஆன்மிக அமைப்புகளில் பல பயிற்சி, முயற்சிகளில் ஈடுபட்டுக் கொண்டு இருந்தேன். எனது தேடுதல் நிறைவடைந்ததாகத் தெரியவில்லை. தற்போது பகவத் ஐயாவின் புத்தகம், பகவத் பாதை, You tube ஐயாவின் Video எனப் பலவற்றையும் பார்த்துப் படித்தவுடன் விளக்கிக் கூறமுடியாத மன அமைதியும், மன நிறைவும் என்னுள் ஏற்பட்டுள்ளதாக உணர்கிறேன். உண்மையில் எனது மனம் எதைப் புரிந்து கொண்டது? எனக்குள் என்ன நடந்தது? சற்று விளக்கமாகக் கூறவும்.

**பதில் :** பகவத் ஐயாவின் இந்தப் புரிதலுக்கு முன்புவரை 'நான்' என்று ஒன்று நிரந்தரமாக இருப்பதாகவும், அதிலிருந்துதான் எண்ணம் தோன்றுவதாகவும், உணர்வு ஏற்படுவதாகவும் அனுபவம் ஏற்படுவதாகவும் நினைத்துக் கொண்டு இருந்தோம். ஐயாவின் இந்த புரிதலுக்குப் பிறகு தான் எண்ணம், உணர்வு, அனுபவம் என அனைத்தும் தாமாகத் தோன்றுகின்றன என்பதே நமக்கு முதல் முதலாகத் தெரிகிறது. மனதில் தாமாகத் தோன்றுவது என்பது ஒன்று, நாமாகச் சிந்தித்துச் செயல்படுவது என்பது ஒன்று என்று மனதை இரண்டாக பிரித்துப் பார்த்து புரிந்து கொள்ளும் ஒரு புதிய அணுகுமுறைக்கு நாம் வருகிறோம்.

பொதுவாக நமக்கு 14, 15 வயதில் தான் அறிவு வளர்ச்சி ஏற்படுகிறது. அந்த அறிவைக் கொண்டு நமது தேவைகளை நாமே முயற்சி செய்து பூர்த்தி செய்துகொள்கிறோம். அதைத் தான் Age of Maturity என்று கூறிக் கொள்கிறோம். அதன் பிறகு நாம் சந்திக்கும் நடைமுறை வாழ்வில் நமக்குத் தோன்றும் எண்ணம், உணர்வு, அனுபவம் போன்றவை நமக்குப் பிடித்திருந்தால் மகிழ்ச்சியும், நமக்குப் பிடிக்காமலிருந்தால் வருத்தமும், வேதனையும் ஏற்படுகின்றன. நமக்குப் பிடித்த எண்ணம், உணர்வு, அனுபவம் தொடர்ந்து நம்முடன் எப்போதும் இருந்தால் நாம் மகிழ்ச்சியாக இருப்போம் என்று நினைத்து அதைத் தொடர்ந்து தக்க வைத்துக் கொள்ள முயற்சி செய்வோம். அதே போல் வேண்டாத எண்ணம் தோன்றும் போது நமக்கு இப்படி ஏற்படவே கூடாது என்று அதை எப்படி எல்லாம் நம்மிடமிருந்து அகற்றுவது என்பதில் நம்முடைய எல்லா முயற்சிகளும் இருக்கும். நாம் விரும்பியபடி நடந்தால் மகிழ்ச்சியும், மாறி நடந்தால் துன்பமும் அடைகிறோம். நமக்கு மகிழ்ச்சியால் எந்தத் தொந்தரவும் இல்லை. நமக்குத் தோன்றும் வேண்டாத எண்ணம், உணர்வு, அனுபவங்களை எதிர்த்து போராடிப் போராடி, நமக்கு நாமே முரண்பட்டு முரண்பட்டு எல்லா விதமான துன்பங்களையும் வேதனைகளையும் அடைகிறோம். பிறகு அந்த துன்பத்தையும் நம்மால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அப்படி நமக்கு ஏற்படும் துன்பத்தை நீக்குவதற்காகத் தான் நாம் ஆன்மிகத்தின் பக்கம் திரும்புகிறோம்.

ஏனெனில் துன்ப நீக்கத்திற்கான ஒரே வழி ஆன்மிகம்தான் என்று நாம் இதுவரை கேள்விப்பட்ட சாத்திரங்கள், உபதேசங்கள் மற்றும் பல மகான்களின் வாழ்க்கை வரலாறுகள், வழிகாட்டல்கள் என பலவற்றிலும் கூறப்பட்டுள்ளன. நாமும் நமது துன்ப நீக்கத்திற்காக ஆன்மிகத்தை நோக்கித் திரும்புகிறோம். ஒவ்வொரு ஆன்மிக அமைப்பிலும் ஒவ்வொரு விதமான வழிமுறைகளும், பயிற்சிகளும் கொடுக்கப்படுகின்றன. அதில் உடல் நலம் மற்றும் மன நலத்திற்கென பயிற்சிகள் கொடுக்கப்படுகின்றன. நாம் முதலில் உடற்பயிற்சியை முறையாக பயின்று உடல் நலத்தில் நல்ல முன்னேற்றம் அடைகிறோம். அதே போல் மனத்திற்குப் பயிற்சி கொடுத்து உடல் நலத்தைப் போல் மனதையும் வளப்படுத்தி விடலாம் என்று நினைத்துப் பயிற்சி முயற்சிகளில் ஈடுபடுகிறோம்.

உடல் நலத்திற்குக் கூட மனநலம் தான் உதவியாக இருக்கிறது என்பது நமக்குத் தெரிகிறது. இப்படி எல்லா வகையிலும் மனநலத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்து மனவளத்தை எப்படியாவது பெற வேண்டும் என்று எல்லா விதமான பயிற்சி, முயற்சிகளிலும் ஈடுபடுகிறோம். தவம், எண்ணங்களைச் சீர் அமைப்பது, நல்ல எண்ணங்களை விதைப்பது, சுய முன்னேற்ற சிந்தனைகளில் ஈடுபடுவது, கோபத்தைக் கட்டுப்படுத்துவது, Auto Suggestion, மந்திர ஜபத்தில் ஈடுபடுவது, பிராணாயாமம், மூச்சுப்பயிற்சி என பலவிதமான ஆன்மிகப் பயிற்சிகளின் மூலம் மனதை அமைதிப்படுத்தி மனநிறைவாக வாழ எல்லா முயற்சிகளையும் மேற்கொள்கிறோம். பயிற்சிகளின் ஆரம்ப காலத்தில் நன்றாக இருப்பதுபோல தான் தெரிகிறது. பிறகு நாட்கள் போகப் போக மனப் பயிற்சி நேரம் போக மற்ற நேரங்களில் எல்லோரையும் போல் நமக்கும் வேண்டாத எல்லாவிதமான உணர்வுகளும் ஏற்படுகின்றன என்பது தெரிகிறது.

அப்படி நமக்கு தெரியும்போது மனப்பயிற்சிகளை இன்னும் கொஞ்சம் அதிகப்படுத்தினால் நமக்கு எப்படியும் தீர்வு கிடைத்து விடும் என்று நம்புகிறோம். அதற்காகப் பயிற்சி முயற்சிகளைத் தீவிரப்படுத்துகிறோம். ஆனாலும் நமக்கு தேவையான மனநிறைவு மட்டும் கிடைக்கவில்லை. நாம் ஒரு பக்கம் பயிற்சி, முயற்சிகளை கூட்டிக்கொண்டே போகின்றோம். ஆன்மிக அமைப்பையும் மாற்றி மாற்றி முயற்சி செய்து பயிற்சிகளிலும் ஈடுபடுகிறோம். இப்படி எதில் ஈடுபட்டுப் பார்த்தும் நமக்கு மன அமைதி மட்டும் கிடைக்கவில்லை. நமது ஆன்மிகத் தேடுதலில் முடிவுக்கு வர முடியாமல் தடுமாறுகிறோம்.

இப்படிப்பட்ட நிலையில் தான் பகவத் ஐயாவின் நூல்கள், பகவத் பாதைகள், You Tube-ல் ஐயாவின் Video, pravaagam.org, sribagavath.org என்ற இணையதளங்களில் தேடுதல், ஞானமுகாம் பற்றிய நண்பர்களின் Whatsapp Message போன்ற ஏதோ ஒரு வகையில் பகவத் ஐயாவைப் பற்றியும், அவரது வழிமுறைகளைப் பற்றியும் தெரிந்து கொள்கிறோம்.

இவரது அணுகுமுறையானது மனதின் இயக்கத்தைப் பற்றி இதுவரை நாம் கடந்து வந்த ஆன்மிக அமைப்புகள் அனைத்திலிருந்தும் ஒரு புதிய அணுகுமுறையாக அமைந்து இருக்கிறது, முற்றிலும் ஒரு புதிய கோணத்தில் எல்லோருக்கும் புரியும் வண்ணம் மிக எளிமையாக புதிய வழிமுறையை நமக்குக் காட்டித் தருகிறார். இவரது வழிமுறையில் மனதிற்கு எந்தப் பயிற்சி, முயற்சியும் கிடையாது. நமது மனது எப்படி செயல்படுகிறது என்ற மனதின் செயல்பாட்டையே நாம் புரிந்து கொள்வதற்கு வழிமுறையாக்கி மிக எளிமையாக வடிவமைத்திருக்கிறார் பகவத் ஐயா அவர்கள். இப்படி புரிந்து கொள்வதே மனதிற்கு ஒரு தீர்வாக அமைகிறது. மனதின் ஒரு பகுதி தாமாக இயங்குகிறது. அது அப்படி இயங்குவது நமது கட்டுப்பாட்டில் இல்லை என்பதும் நமக்குப் புரிகிறது. மனம் நமது கட்டுப்பாட்டில் இருந்தால் நாம் விரும்பியபடியே எண்ணத்தையும் உணர்வையும் உருவாக்கிக் கொள்வோம் அல்லவா? மனம் நமது கட்டுப்பாட்டில் இருந்தால் யாராவது விரும்பி நமக்கு வேண்டாத எண்ணத்தையோ, உணர்வையோ உருவாக்கிக் கொள்வோமா? ஒரு போதும் அப்படி உருவாக்கிக் கொள்ள மாட்டோம். நமக்குத் தாமாகத் தோன்றும் எண்ணத்தை நாம் இதுவரை சேகரித்துள்ள மனப்பதிவுகளைக் கொண்டு சிந்தித்து, பிறகு செயல்படுகிறோம். நமது அன்றாட செயல்கள் எல்லாமே எண்ணம், சிந்தனை, செயல் என்ற தொடரில் தான் நடைபெறுகின்றன. இந்தத் தொடரில் எப்போது எந்த நிலையில் நமது மனதின் கவனத்திற்குத் தெரியாமல் நாம் தான் எண்ணிக் கொண்டு இருக்கிறோம்; நாம் தான் இப்படிச் சிந்தித்துக் கொண்டு இருக்கிறோம்; நாம் தான் இப்படிச் செயல்பட்டுக் கொண்டு இருக்கிறோம் இந்த உண்மை நமக்குத் தெரியும் போது தான் நாம் இவ்வாறு புரிந்து கொள்கிறோம்; "நமது கட்டுப்பாட்டில் இல்லாமல் நம்முடைய மனம் தானாகவே எண்ணிக்கொண்டோ, தாமாகவே சிந்தித்துக் கொண்டோ, தானாகவே செயல்பட்டுக் கொண்டோ இருந்திருக்கிறது."

நமது கவனத்திற்குத் தெரிந்த பிறகு தான் நம்முடைய அறிவு செயல்பாட்டிற்கு வருகிறது. நமது அறிவு செயல்பாட்டிற்கு வருவதற்கு முன்பாக நடந்து முடிந்த எதற்கும் நாம் ஒன்றும் செய்ய முடியாது. ஏன்னெனில் அந்த இடத்தில் நாமே செயல்படவில்லை, நம்முடைய மனப்பதிவுகளின் அதிகப்படியான அழுத்தம்தான் நம்முடைய கவனமற்ற செயல்பாட்டிற்குக் காரணமாக இருக்கிறது என்பது நமக்குத் தெரிகிறது. நமது கவனமின்றிச் செயல்பட்டதற்கு நாம் எப்படிப் பொறுப்பேற்றுக் கொள்வது? நமது அறிவு செயல்படும் போதுதான் நல்லது, கெட்டது என அனைத்தும் தெரிகிறது.

நமக்குக் கவனம் தெரிந்த பிறகு தான் நம்மால் சரியான செயலைச் செய்ய முடிகிறது. அப்படிக் கவனம் ஏற்பட்ட பிறகும்கூட சில செயல்கள் நம்முடைய அறிவுக்குத் தெரிந்தும் கூட பழைய பழக்கத்தின் அழுத்தம் காரணமாக சில தவறான செயல்களைச் செய்து விடுகிறோம்.

பொதுவாக மனதின் கவனத்திற்கு வந்த பிறகு பெரும்பாலான செயல்கள் சரியானதாகவும் ஏதோ சில செயல்கள் மட்டும் நம்முடைய பழைய பதிவுகளின் தாக்கத்தினால் நமக்குத் தெரிந்தே தவறாகவும் செய்து விடுகிறோம். அப்படி நடக்கும் தவறுகளும், அதனால் நமக்கு ஏற்படும் விளைவுகளும் நாம் திரும்பவும் அந்த செயலைச் சரியாக எதிர்க்கொள்வதற்குத் தூண்டுகோலாக அமைகிறது.

மொத்தத்தில் இதுவரை நமக்குள் இருந்து வந்த தேவையற்ற அகப்போராட்டம் ஒரு முடிவுக்கு வருகிறது. **மனதைப் பற்றிய புரிதல் கவனத்திற்கு வரும் போதெல்லாம் அதுவரை இருந்து வந்த அகப்போராட்டம் அப்படியே ஓடி மறைவதை நம்மால் நன்றாக உணர முடிகிறது.** நாம் நம்மை எதிர்த்துப் போராடுவதை விட்டு விடுகிறோம். நம் மனதை எதிர்த்து எதுவும் செய்ய முடியாது என்பதை புரிந்து கொள்ளும்போது அகச் சரணாகதி தானாக ஏற்படுகிறது. அறிவு எங்கு செயல்பட வேண்டும் எங்கு செயல்படத் தேவையில்லை என்பது நமக்கு நன்றாகப் புரிகிறது. மனதில் தாமாகத் தோன்றும் எண்ணம் மற்றும் உணர்வுகளை எதிர்த்து அறிவு போராடாமல், அப்படித் தோன்றும் எண்ணம், உணர்வுக்குத் தேவையான சரியான செயலைச் செய்யும் தன்மைக்கு உயர்கிறது.

இப்படி நாம் செயல்படும் போது எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்ளும் ஒரு புதிய பரிமாணத்திற்கு மனம் வந்து விடுகிறது. உதாரணமாக ஆற்றின் ஓட்டத்தை எதிர்த்து நீச்சலடித்துக் கொண்டு இருந்த நாம் ஆற்றின் இயல்பான ஓட்டத்துடன் இணைந்து நீச்சலடிக்கும் தன்மைக்கு மாறிவிடுகிறோம். ஒரு 100 கிலோ எடையுடைய மேஜை நகர்த்துவதற்கு 100 கிலோவுக்கும் அதிகமான சக்தியை பயன்படுத்தி நகர்த்த வேண்டியிருக்கும். அப்படி நகர்த்தவும் மிகவும் சிரமமானதாக இருக்கும். ஆனால் அதே மேஜைக்கு சக்கரம் பொருத்தப்பட்டு இருந்தால் நமது விரல் நுனியின் அழுத்தம் கூட நகர்த்துவதற்குப் போதுமானதாக இருக்கும். நகர்த்துவது என்பது மிகவும் எளிமையானதாக இருக்கும். இதுபோல் நம்மை அழுத்திப்பிடித்துக் கொண்டு இருந்த உணர்ச்சிகளெல்லாம் ஓடி மறைவதைப் போல் நம்மால் உணர முடிகிறது. நமது மனம் திட நிலையிலிருந்து திரவ நிலைக்கு மாறிவிடுகிறது. எல்லாவற்றையும் சுலபமாக எடுத்துக்கொள்ளும் மனநிலைக்கு நாம் தாமாக வந்து விடுகிறோம். இப்படி நமது மனம் சுதந்திரமாக அதன் போக்கில் ஓடி மறைவதையே பிரவாக நிலை என்று குறிப்பிடுகிறோம்.

"பிரவாகம் என்பது மனம் சுதந்திரமாக செயல்படுவதே."

V.A.P. சரவணன் சேலம்
செல்: 9994205880

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்தச் சக பயணியின் வணக்கம்,

கோவையில் நமது பகவத் ஐயாவின் சிறப்புரை "தன்னை அறியும் ஞானம்" என்ற தலைப்பில் 05.06.2015 அன்று மாலை மிகச் சிறப்பாக நடைபெற்றது. இதில் 120 அன்பர்களுக்கு மேல் கலந்து கொண்டனர். இது அனைவருக்கும் பயனுள்ள வகையில் அமைந்திருந்தது.

மேலும் 07.06.2015 அன்று நடைபெற்ற ஹீலர் பாஸ்கர் அவர்களின் திருமண வரவேற்பு விழாவில் பகவத் ஐயாவுடன் நாங்களும் சென்று கலந்து கொண்டோம். நம் ஐயாவின் ஞான நூல்களைப் படித்த பல அன்பர்கள் வந்திருந்தார்கள். அவர்கள் ஐயாவின் வருகையைப் பயன்படுத்திக் கொள்ளும் வண்ணம் அங்கேயே ஒரு கலந்துரையாடலிலும் ஈடுபட்டனர்.

அன்று மாலை, ஜீலை மாதம் பொள்ளாச்சியில் ஞான முகாம் நடைபெற இருக்கின்ற இடத்தைப் பார்வையிட ஐயாவுடன் சென்றிருந்தோம். இது பொள்ளாச்சியில் இருந்து வால்பாறை செல்லும் வழியில் ஆழியாறு அறிவுத் திருக்கோயிலுக்கு 3 கி.மீ முன்னதாகவே அமைந்துள்ளது. இவ்விடம் மிகவும் இனிமையாகவும் இயற்கை எழிலோடும் அமைந்துள்ளது.

இது போன்ற சூழலில் ஐயாவுடன் தங்கியிருந்து ஞானத்தெளிவு பெறுவது என்பது ஓர் அரிய வாய்ப்பு.

இதுவரை ஞான முகாமில் கலந்து கொள்ளாத அன்பர்கள் இருப்பின், அவர்களை இந்த ஞான முகாமில் கலந்து கொள்ளுமாறு அன்போடு கேட்டுக் கொள்கிறோம்.

ஏனெனில் நாம் எத்தனை நூல்கள் படித்திருந்தாலும், இது போன்ற ஞான முகாம்களில் கலந்து கொண்டு ஐயாவுடன் கலந்துரையாடல்களில் ஈடுபட்டு தம் சந்தேகங்களை தெளிவு பெறும் போது தான் நமது தெளிவை நம்மால் உறுதிபடுத்திக் கொள்ள முடியும். புதிய அன்பர்களாக இருப்பினும் கூட அவர்களும் திறந்த மனதோடு ஞான முகாமில் கலந்து கொள்ளும் போது ஞானத் தெளிவு பெறுவது திண்ணம்.

ஆன்மிகத்தில் எத்தனையோ பயிற்சி முயற்சிகளையெல்லாம் செய்த போது கிடைக்காத விடுதலையும், மாற்றங்களும், ஐயா கொடுக்கும் இந்த எளிய புரிதலைப் புரிந்துகொள்ளும் போது மிக எளிதில் கிடைப்பதோடு அது நாளுக்கு நாள் நம்மையறியாமலேயே நம்மை ஒழுங்குபடுத்தி வழி நடத்திச் செல்கிறது. இந்தப் புரிதலின் உயர்வை எண்ணும் போது மிகவும் வியப்பாகவும் உள்ளது.

இந்த உயர்ந்த ஞானப்புரிதலால் தெளிவடைந்தவர்கள் மற்றவர்களோடும் இதைப் பகிர்ந்து கொள்ள வேண்டும். ஏனெனில் இப்படி உண்மையானது, மிக எளிமையாக இருப்பது தெரியாமல் ஆன்மிகத்தில் பல பயிற்சிகளையும் முயற்சிகளையும் செய்து முட்டி மோதிக் கொண்டிருப்பவர்கள் ஏராளம். அவர்கள் அனைவருக்கும் வழிகாட்டுவது நமது கடமை.

இந்தப் பணியில் உங்களையும் இணைத்துக் கொண்டு அவரவர்கள் இருக்கும் பகுதிகளில் சத்சங்கங்களை நடத்தி, அனைவருக்கும் இந்த உண்மையை எடுத்துச் செல்ல உதவுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

அன்புடன்
ஆசிரியர். **K.S. ஜீவமணி** செல் : 97891-65555

| நாள் | நேரம் | இடம் | பொருள் | ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|---|
| 22-07-2015 புதன் | 4.00pm to 5.30pm | **சேலம் அம்மாப்பேட்டை, அறிவுத்திருக்கோயில், சேலம்.** | **தியானமும், ஞானமும்** | **99942 05880 97891 65555** |
| 24-07-2015 வெள்ளி | 6.30pm to 8.30pm | **நந்தா திருமண மண்டபம், (அபி மஹால்),** அம்மாப்பேட்டை மெயின் ரோடு, பாரத் பஜாஜ் ஷோரூம் அருகில், சேலம். | **தன்னை அறியும் ஞானம்** | **99942 05880 97891 65555** |
| 01-08-2015 சனி | 6.00pm to 8.30pm | **P.சுந்தரராஜன்** 7/201, வேதவாக்கம் கிராமம், மதுராந்தகம் தாலுக்கா, காஞ்சிபுரம் (Dt). | **கவலைகளுக்கு எல்லாம் ஞானமே தீர்வு** | **93446 72981 98840 97438** |
| 02-08-2015 ஞாயிறு | 6.00pm to 8.30pm | **Dr. கார்த்திக்** திருக்கழுக்குன்றம், காஞ்சிபுரம் (Dt). | **கவலைகளுக்கு எல்லாம் ஞானமே தீர்வு** | **98947 96525 94444 02986** |
| 08-08-2015 சனி | 6.00pm to 8.30pm | **ஸ்ரீ பகவத் மிஷன்** சென்னை மையம், அம்பத்தூர். | **ஆன்மாவைத் துறந்து ஆன்மாவாக இரு** | **98840 97438 94444 02986** |
| 09-08-2015 ஞாயிறு | 6.00pm to 8.30pm | **பனிகிரஹா ஹால்** ஆரிய கவுடா ரோடு, வெஸ்ட் மாம்பழம், சென்னை - 33. | **நீங்களும் ஞானியாகலாம்** | **98840 97438 94444 02986** |



## பொள்ளாச்சியில் 3 நாள்

# ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

நாள் : 17-07-2015 மாலை 5-00 மணி முதல்
19-07-2015 மதியம் 3-00 மணி வரை

இடம் : **சிவகன்யா தோப்பு,** ஆலாங்கண்டி பஸ் ஸ்டாப்,
(அங்கலக்குறிச்சிக்கும், ஆழியார் அணைக்கும் இடையில்)
தாய் அன்பாலயம் அருகில், வால்பாறை ரோடு, **பொள்ளாச்சி.**

தலைப்புகள் : **ஞானத் தெளிவு**
**நான் யார்?**
**அக - புற வாழ்வு**
**ஞானத் தெளிவில் உறுதி.**

நன்கொடை ரூ.1000/- (தங்குமிடம் மற்றும் உணவுக்காக)
தங்குவதற்கு ஆண்களுக்கும், பெண்களுக்கும்
தனித்தனி இடவசதி உண்டு.
(படுக்கை வசதியுடன் வர வேண்டும்)

அனைவரும் வருக!
தெளிவு பெறுக!

முன்பதிவு அவசியம்.
முன்பதிவிற்கு: 97891 65555, 99942 05880
**Online Booking : www.pravaagam.org**
விபரங்களுக்கு : 98422 16465, 86086 99899

மேலும் விபரங்களுக்கு




## ஸ்ரீ பகவத் மிஷன்

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் - 3. செல்: 9789165555, 9994205880
www.pravaagam.org, www.sribagavath.org -youtube: enlightenment/sri bagavath

## பகவத் ஐயாவை நேரில் சந்திக்க

| | |
|---|---|
| 27.6.2015 முதல் 6.7.2015 வரை | - சென்னை |
| 7.7.2015 முதல் 15.7.2015 வரை | - திருச்செந்தூர் |
| 17.7.2015 முதல் 19.7.2015 வரை | - பொள்ளாச்சி ஞானமுகாம். |
| 20.7.2015 முதல் 27.7.2015 வரை | - சேலம். |

ஐயாவை சந்திக்க விரும்புபவர்கள் 99442 15677 என்ற எண்ணில் தொடர்பு கொண்டு முன் அனுமதி பெற்று சந்திக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இவண்
**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்.



ஏப்ரல் 30, மே 1,2,3 ஆகிய தேதிகளில் நடைபெற்ற **ஏற்காடு சிறப்பு ஞானமுகாமில்** கலந்து கொண்டவர்களுடன் **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்.



**ஏற்காடு சிறப்பு ஞானமுகாமில்**
காலையில் ஐயாவுடன் நடைப் பயிற்சியின் போது

**ஏற்காடு சிறப்பு ஞானமுகாமில்**
கலந்து கொண்டவர்களில் ஒரு பகுதி





**ஸ்ரீ பகவத் மிஷன்**
சென்னை மையத்தில் 27-06-2015
அன்று நடைபெற்ற ஐயாவின் சிறப்புரை
கூட்டத்தின் ஒரு பகுதி



**ஸ்ரீ பகவத் மிஷன்**
சென்னை மையத்தில் 27-06-2015
அன்று நடைபெற்ற ஐயாவின் சிறப்புரை
கூட்டத்தின் ஒரு பகுதி




**ஸ்ரீ பகவத் மிஷன்**
சென்னை மையத்தில் 27-06-2015
அன்று நடைபெற்ற ஐயாவின் சிறப்புரை
கூட்டத்தின் மற்றுமொரு பகுதி

# பகவத் பாதை சந்தா விபரம்

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஓர் ஆண்டு சந்தா | - | ரூ. 100/- | ஐந்தாண்டு சந்தா | - | ரூ. 500/- |
| ஆயுள் சந்தா | - | ரூ, 1000/- | | | |

சந்தா தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

www.pravaagam.org என்ற இணைய தளத்தில் Credit Card / Debit Card மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank-ல் Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம்.

Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

# எதிர்கால திட்டம் பற்றிய கலந்தாலோசனை கூட்ட அழைப்பு

பகவத் பாதையில் பயணிக்கும் உங்கள் அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கங்கள்...

நமது பகவத் ஐயா அவர்கள் ஞானத்தை இதுவரை யாரும் சொல்லாதவாறு அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் எளிமையாக்கி இந்த உலகத்திற்கு வழங்கி வருகிறார். தற்போது ஒவ்வொரு ஆண்டும் டிசம்பர் மற்றும் ஜனவரி மாதங்களில் திருவண்ணாமலையிலும் மற்ற நேரங்களில் பெங்களூர், சென்னை மற்றும் சேலம் என்று வெவ்வேறு ஊர்களுக்கு சென்றும் சத்சங்கம் மற்றும் ஞான முகாம்களின் மூலம் இம்மாபெரும் தொண்டினைச் செய்து வருகிறார்கள்.

இனி வரும் காலத்தில், ஸ்ரீ பகவத் மிஷனின் மைய அலுவலகம் இயங்கும் சேலத்தில் உள்ள திருவருட்சோலையில் நிரந்தரமாகத் தங்கியிருந்து தொண்டாற்றவும் அவ்வபோது அழைக்கும் இடங்களுக்குச் சென்று தொண்டாற்றவும் எண்ணியுள்ளார்கள்.

எனவே திருவருட்சோலையில் ஐயா நிரந்தரமாகத் தங்குவதற்கென ஒரு தங்குமிடமும் ஞான முகாம் அரங்கம் மற்றும் நம் ஞானக் குடும்ப உறுப்பினர்கள் தங்கள் குடும்பத்தோடு வந்து தங்கிச் செல்ல தங்குமிடம் ஆகியவற்றை அமைக்கத் திட்டமிட்டுள்ளோம்.

அதுபற்றியும், ஐயா வழங்கும் ஞானப்புரிதலை அனைவரிடமும் கொண்டு செல்வது பற்றிய புதிய திட்டங்கள் குறித்தும் ஒரு கலந்தாலோசனை நடத்த முடிவெடுக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களும் இந்த கலந்தாலோசனைக் கூட்டத்தில் கலந்து கொள்ள ஒரு நாள் முன்கூட்டியே 25-07-2015 அன்று திருவருட்சோலைக்கு வர இருக்கிறார்கள்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் கருத்துகளை அனைவருக்கும் எடுத்துச் செல்வதில் ஆர்முள்ளவராக நீங்கள் இருக்கும் பட்சத்தில் இந்தச் சந்திப்பை முக்கியத்துவம் மிகுந்த ஒன்றாகக் கருதி நமது அழைப்பினை ஏற்று இந்தக் கலந்தாலோசனை கூட்டத்தில் பங்கு பெறுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

இடம் : **திருவருட்சோலை, கொடம்பக்காடு,** பெரியகவுண்டாபுரம், சேலம்.
(சேலம் அயோத்தியாப்பட்டணத்தில் இருந்து ஆத்தூர் செல்லும் வழியில் 2 கி.மீ. தொலைவில் உள்ள மகா இஞ்ஜினியரிங் காலேஜ் எதிரில் பெரியகவுண்டாபுரம் செல்லும் சாலையில் உள்ளது.)

நாள் : **20-07-2015 ஞாயிற்றுக்கிழமை** நேரம் : **காலை 10-00 மணிமுதல் மாலை 5-30 மணிவரை**

தாங்கள் விரும்பினால் 25-07-2015 அன்றே திருவருட்சோலைக்கு வந்து ஐயாவுடன் தங்கியிருந்து கலந்து கொள்ளலாம்.
தங்கள் வருகை நேரம் குறித்து முன்கூட்டியே தெரிவித்தால் தங்குமிடம் மற்றும் உணவு வசதி ஏற்பாடு செய்ய உதவியாக இருக்கும்.

தங்கள் நல்வரவை விரும்பும்:
**ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.**
**Cell: 99942 05880, 94432 90559, 97891 65555**

திருவருட்சோலைக்கு வரும் வழி: சேலம் இரயில் நிலையம் (ஜங்சன்) - சேலம் புதிய பேருந்து நிலையம் - ஆத்தூர் செல்லும் பஸ்ஸில் அயோத்தியாப்பட்டணம் பஸ் ஸ்டாப்பில் இறங்கவும். பெரிய கவுண்டாபுரம் (அயோத்தியாப்பட்டணத்தில் இருந்து மினி பஸ் வசதி உள்ளது ) - திருவருட்சோலை (பெரியகவுண்டாபுரத்தில் இருந்து 2கி.மீ. நடைபாதையில் கொடம்பக்காடு முடிவில் உள்ளது.)

பெரிய கவுண்டாபுரம் வந்து சேர்ந்து அழைக்க வேண்டிய தொலைபேசி எண் : 97891 65555, 99942 05880.
(பெரிய கவுண்டாபுரத்திலிருந்து கார் வசதி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.)

குறிப்பு : இந்த ஆலோசனைக் கூட்டத்திற்கு வர வாய்ப்பில்லாதவர்கள் தங்களது ஆலோசனைகளை தொலைபேசியிலும் தெரிவிக்கலாம்.

# 3 வருட பகவத் பாதை தொகுப்பு

திடீரென்று இரண்டு மூன்று நாட்களாக நல்ல மழை. மழையாகப் பொழிந்த தண்ணீரெல்லாம் அங்குமிங்குமாக ஓடி கடலில் கலந்து மறைந்து விடுகிறது.

நமக்கு தண்ணீர் தேவையில்லையா?

மழை பெய்யும் போது மட்டும் தண்ணீர் கிடைத்தால் போதுமா?

அணை ஒன்றைக் கட்டி, நீரை சேமித்து வைப்போமானால், தேவைப்படும் போதெல்லாம் உபயோகித்துக் கொள்ளலாம அல்லவா?

அவ்வகையில் அமைக்கப்பட்ட அணைக்கட்டு தான் இந்த பகவத் பாதைத் தொகுப்பு.

பகவத் பாதையின் முதல் இதழில் "நினைவும் சிந்தனையும்" - **Thought and Thinking** எனும் கட்டுரை ஒன்றை பகவத் ஐயா எழுதியிருந்தார். அதைப் படித்த சிதம்பரத்தைச் சேர்ந்த அன்பர் ஒருவர் தொலைபேசியில் தொடர்பு கொண்டு "ஐயா தான், தான் சொல்ல வேண்டியக் கருத்துக்களையெல்லாம் இந்த ஒரே கட்டுரையில் கூறி விட்டாரே! இனி வரும் இதழ்களில் என்ன தான் எழுதுவீர்கள்?" எனக் கேட்டார்.

ஆனாலும் ஒவ்வொரு இதழிலும் புதிய புதிய கட்டுரைகள் வந்த வண்ணம் உள்ளன.

இது எப்படி சாத்தியம்?

ஐயா கூறும் மையக்கருத்து ஒன்று தான் என்றாலும், அதைப் பல கோணங்களிலும் விளக்க வேண்டியது ஏற்பட்டுள்ளது. அவருடன் உரையாடும் பலர். பலவிதமான கேள்விகள் மூலம் அந்த மையத்தை அணுகுகின்றனர். அத்தைய உரையாடல்கள் மூலம், புதிய புதிய கோணங்கள் ஏற்படுகின்றன. அவற்றைத் தொகுத்து எழுதுவதன் மூலமே புதிய கட்டுரைகள் உருவாகின்றன.

நமது பகவத் பாதையின் ஏதோ ஒரு சில இதழ்கள் மட்டும், தகுதியுள்ள சிலருக்கு தற்செயலாகச் சேர்ந்திடும்போது அவர்கள் முந்தைய இதழ்களைத் தேட ஆரம்பித்து விட்டனர். இடையில் சந்தாதாரர்களாக சேர்ந்த பலரும் இவ்வாறு தேட ஆரம்பித்து விட்டார்கள்.

பலருடைய கோரிக்கைகளையும் ஏற்று இந்த அணையைக் கட்டியுள்ளோம்.

பாதையில் வெளி வந்த பகவத் ஐயாவின் கட்டுரைகள், பலவற்றையும் கவர்ந்த சரவணன் ஐயா கேள்வி பதில்கள், ஜென் கதைகள், பலன் பெற்றோர் பலரின் அனுபவக் குறிப்புகள் மற்றும் சிந்தனை விருந்துகள் அனைத்தும் அப்படியே இடம் பெற்றுள்ளன.

உங்களுக்கு தேவையான மதகைக் தேவையான போது திறந்து பயன்படுத்திக் கொள்ளலாம்.

இந்த பகவத் பாதை தொகுப்பு நூல் 26-07-2015 அன்று சேலம் திருவருட்சோலையில் வெளியிடப்பட உள்ளது.

**அனைவரும் வாங்கி பயன்பெற அழைக்கிறோம்.**

**விலை : ரூ. 200/- மட்டுமே**

அன்புடன்

**N.கைலாசம்** தலைவர்,

ஸ்ரீ பகவத் மிஷன்

## கர்மா

ஜென் கதை

அவர் ஒரு ஜென் குரு.

மிக அமைதியாக ஒரு மரத்தடியில் வீற்றிருக்கிறார். அந்த வழியாகச் சென்ற வீரனொருவன், கண்களை மூடி மவுனமாக அமர்ந்திருந்த அவரைக் கண்டதும் தனது குதிரையை விட்டுக் கீழே இறங்கினான்.

பின்னர் மெல்ல அவர் அருகே வந்து கைகூப்பி அவரை வணங்கி நின்றான். சிறிது நேரங்கழித்து குரு தமது கண்களைத் திறந்து அவனை ஊடுருவி நோக்கினார். ஆனால் எதுவும் பேசவில்லை.

"குருவே! எனக்கு ஒரு சந்தேகம். இது நெடுங்காலமாகவே எனக்கு உள்ள சந்தேகம். தாங்கள் தான் அதற்கு விடை கூற வேண்டும்" என்று பேச்சை ஆரம்பித்தான் அந்த வீரன்.

குரு அப்போதும் மவுனமாக அவனையே நோக்கியபடி இருந்தார்.

"பாவம், புண்ணியம், சொர்க்கம், நரகம் என்றெல்லாம் நெடுங்காலமாய்ச் சொல்லப்பட்டு வருகிறதே, இதெல்லாம் உண்மையிலேயே உள்ளனவா? கர்மா என்று சொல்லுகிறார்களே, அனைத்தும் கர்மா படியே நடக்கிறது என்று சொல்லுகிறார்களே, அப்படி என்றால் என் பாவ புண்ணியத்திற்கு நான் எப்படிப் பொறுப்பேற்க முடியும்?" என்று தன் சந்தேகத்தை கேட்டான். ஆனால் அதற்கு ஜென் குரு பதிலேதும் சொல்லவில்லை. ஆனால் அவனோ தனக்குப் பதில் கிடைக்காமல் அங்கிருந்து அசைகிறவனாகத் தெரியவில்லை.

குரு இப்போது அவனைத் தீர்க்கமாய் நோக்கினார். சிறிது நேரம் கழித்து மெல்ல அவர் ஒரு கேள்வி கேட்டார், அவனைப் பார்த்து:

ஜென் கதை - "கர்மா"



“நீ என்ன செய்கிறாய்?”

“நான் இந்த நாட்டின் தளபதி. எல்லாப் படை வீரர்களுக்கும் பிரதான சேனாதிபதி” என்றான் அந்த வீரன் பெருமையுடன்.

குருவிடமிருந்து உடனே ஒரு கேலிச்சிரிப்பு வெளியிடப்பட்டது.

“நீ ஒரு முழு முட்டாள். உன்னைப் போன்ற மடையனை எவன் சேனாதிபதியாக நியமித்தான்?” என்று கேலியாகச் சிரித்தபடி கேட்டார்.

இதைக் கேட்ட வீரனின் கண்கள் கனன்றன கடும் கோபத்தால். “ஆ!” என்று ஆவேசமாகக் கர்ஜித்தபடி தன் உறையிலிருந்து வாளை அவன் வேகமாக உருவினான்.

“இதோ நரகத்தின் கதவுகள் திறக்கின்றன” என்றார் குரு குறுஞ் சிரிப்பை நிறுத்தாமல் சிரித்தபடி.

இது கண்டு ஒரு விநாடி பிரமித்த வீரன் சட்டென்று வாளை உறையிலிட்டு விட்டு கை கூப்பி அவரை வணங்கி, “மன்னிக்க வேண்டும் குருவே!” என்றான் பணிவுடன்.

“இதோ சொர்க்கத்தின் கதவுகள் திறந்து விட்டன” என்றார் குரு தன் சிரிப்பை நிறுத்திக் கொண்டு அமைதியாக.

வீரன் புரிந்து கொண்டான், **பாவம் புண்ணியம் நமது செயலில் தான் உள்ளது. அதைத் தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம் நம்மிடம் மட்டுமே உள்ளது. இதுவே ஆகாமியம்.** இதைப் புரிந்தவன் தர்மச் செயலையே தேர்ந்தெடுப்பான்.

## சத்சங்கம்

சென்னையில் கீழ்க்கண்ட இடங்களில் பிரதி வாரம் ஞாயிற்றுக்கிழமை மாலை 6-00 - 7-30 மணி வரை ஐயாவின் கருத்துக்களில் ஈடுபாடு கொண்ட அன்பர்களின் சத்சங்கம் நடைபெற்றுக் கொண்டு வருகிறது. வாய்ப்புள்ள அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைய அழைக்கிறோம்.

**1. ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,**
23/10, பழைய பரோடா வங்கித் தெரு,
செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை- 600053.
செல்: 9884097438, 9381019479, 9444756744

**2. திரு. ரவிச்சந்திரன் இல்லம்**
24/35, கிருபசங்கரி தெரு,
வெஸ்ட் மாம்பலம், சென்னை- 600033.
செல்: 9444402986, 7299186793, 7299049789

**3. South Indian Buddhist Association,**
25/44, Paddy Field Road, Perambur, Chennai - 11.
(Adjacent to Perambur Bus Stand)
Cell: 9940502239, 9444441066, 9884063969

ஐயாவின் அனைத்து நூல்களும் இங்கு கிடைக்கும்.

Registration Number of the News Paper TNTAM/2014/57698
Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017

*If undelivered please return to:*
Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555